# 4
# நாகம்

மல்லிகை மணம் கமழ்ந்து வருவதை ரஸித்த நீலகண்ட சர்மா வாசலோரமாய் நின்று ஜன்னல் வழியே உள்ளே பார்த்தார். ஏதோ ஒரு ராகத்தை மெல்லிய குரலில் இழைத்தபடி தலைக்குப் பூவைத்து மல்லிகை நிரப்பிக்கொண்டிருந்த நாகலக்ஷ்மியைப் பார்த்தார்.... பெருமூச்சு இழையோட குடுமியை முடிந்துகொண்டு படியேறி... ''நாகம்! நாகம்'' என்று குரல் கொடுத்தார்.

கறுப்பு பட்டுச்சேலையில் தங்கக் கொடியும் இலைகளும் பூக்களும் ஜரிகை மஞ்சள் மின்ன வெள்ளை ஜாக்கட்டில் கைகளில் தங்கரேக்கு யானைகள் பின்னப்பட்ட அழகும் பின்னலும் ரெத்தாம்பரப் பொட்டும் நிரம்ப அவள் வந்து தழையத்தழைய நின்று மௌனமாய் ஒடுங்கி கேட்டைத் திறந்ததும் சர்மா வியர்வையைத் துண்டால் வழித்துத் துடைத்தபடி கூடத்தில் நுழைந்தார். ஆளுயரக் கண்ணாடியில் அவர் உருவம் தெரிவது அவருக்கே பிடிக்கவில்லை. நரைத்த தலைச் சிரைத்த வெளுப்பும் குடுமி வெளுப்பும் ம்ஹூம் புருவம்கூட வெளுத்துவிட்டதே.... நாகத்தின்... கல்யாணப் படத்தில் கணவனாக சர்மாதான் உட்கார்ந்திருந்தார்... படம் ஹாலில் மாட்டியிருந்தார். கலர் பூசி போன மாதம்தான் வந்தது. ''ஈச்சுரா'' - என்றார்.

மேஜையில் தான் வாங்கிவந்த பூவை எடுத்துவைத்தார். கொல்லைப்புறம் போய் முகம் கைகால் எல்லாம் தண்ணீரை அடித்து கழுவித் துடைத்துப் பெருமூச்சுடன் கூடத்துக்கு வந்தார். கண்ணாடி முன் நின்று திலகமிட்டுக் கொண்டார். பூஜை அறைக்குள் புகுந்தார்.

தூணைப் பிடித்துக்கொண்டு நின்று காத்திருந்தாள் நாகம்.

தூபம் மணமும் ஜெப மணமும் கிளம்பிக் காற்றோடு கலந்தது. மாலை நேர மங்கல் இருள் பூசிய அந்த நேரத்தில் பொட்டுப் பொட்டாக வியர்வை பொடிந்த முகத்துடன் சர்மா எழுந்தார். ஊதுவத்திக் கொடிகள் நூலாய் இழைந்தன.

''ஏண்டி... என்ன நின்னுண்டிருக்கே... காப்பி எடுத்துண்டு வா''

சேலைப்பாவு காலை அறுக்க உள்ளே ஓட்டமாய் நடந்தாள். பின்னே சர்மாவும் நடந்தார். காப்பியைக் கலந்து பதமாய் ஆற்றினாள். திரும்பியபோது சர்மா அடுக்களையுள் கையில் பூவுடன் வருவது கண்டாள்.

காப்பியை அடுத்த வாய் சாப்பிட்டபோது அவள் ஞாபகம் இறுக அவரை பிடித்தது.. ''நாகம்... இதோ புஷ்பம்'' என்றார். அவர் கண்களுள் அவள் நிறைந்தாள். அவர் மந்தஹாசம் அவளுக்குப் புரிந்தது. பூவைப் பூவுடன் தலையில் வைத்து நிறைத்தபோது மூக்கில் மூக்குத்தி சுடர் விட்டது. கன்னத்து

கொழுவிய வழவழப்பில் பூனை முடி மிளிர்ந்தது. கன்னத்தில் விரல் வைத்துக் கிள்ளினார் சர்மா... அசடு வழிய களுக்கென்று சிரித்தார்... அவருக்காக அவளும் சிரித்து வைத்தாள். அவளும் அப்போதுதான் குளித்து நிறைந்திருந்தாள். எண்ணை மினுங்கும் தலையின் வழவழப்பில் வருடினார். ஏதோ நினைவில் நின்றாள் நாகம். அவள் அணிந்திருந்த கறுப்புப் பட்டு வழுக்கியது அவர் கரங்களில். கழுத்துச் சங்கிலிகளுக்கு மேலே வண்ணக் கழுத்தில் சிறு மடிப்பு அழகேறி இருந்தன. அவர் போட்டிருந்த பனியனின் சொர சொரப்பு அவள் இடுப்பில் உரசிய போது கிளு கிளுத்தது அவளுக்கு. குழையச் சிரித்தாள் நாகம்.

''காப்பி ஆர்றது'' - சர்மா சிரித்தார். அவர் முகத்தில் விழுந்த கோடுகளை அவள் பார்த்தபடி காப்பி டம்ளரை எடுத்து கையில் கொடுத்தாள்.

இருட்டிவிட்டது. மணி போனது தெரியவில்லை.

கூடத்தில் இருந்து கடைக் கணக்குகளை எழுதிக் கொண்டிருந்த சர்மா ஏழரை மணி அடித்தபோது நிமிர்ந்து பார்த்தார். அவருக்கு வலப்புறமாக வந்து நின்ற நாகம் ''எலை போட்டாச்சு சாப்ட வரேளா'' என்றாள். ''வந்துட்டேன்'' - என்றார் சர்மா. கையலம்பினார்.

''வாழக்காய் சுட்டு பொடி பண்ணிருக்கேன். நெய் ஒரு முட்டை விட்டுண்டு போட்டு சாப்பிடுங்கோ. இந்த அப்பளத்தை பொறிச்சு போடறேன்...'' கும்மட்டி அடுப்பில் அப்பளத்தைச் சுட ஒரு கை நிலத்தில் ஊன்றி அமர்ந்த அழகைப் பார்த்த சர்மா பொங்கிப் போனார். பக்கத்திலிருந்த இடைவெளி வழியாக கொல்லைபுறக் கதவு திறந்திருப்பது தெரிந்தது. கிணற்றடியில் நிழல் தட்டியது யாரோ நின்று பார்ப்பது தெரிந்ததும் இலையிலிருந்தபடியே ''யாரங்க நிக்ககறது?'' என்று அதட்டுப் போட்டார். பதில் இல்லை. விறுவிறுவென்று கொல்லைக் கிணற்றடிக்குப் போனார். வேலிக்கப்பால் காட்டாமணி குத்துச்செடிக்கப்பால் இடுப்புக்குமேல் உருவம் தெரிந்தது. நிதானித்த சர்மா ''யாரது'' என்றார்.

''நாந்தாண்ணா''-

''நாந்தான்னா யாரு''

''நாந்தாண்ணா'' என்று மீண்டும் அதே பதிலைச் சொல்லிக் கொண்டே அந்த உருவம் வேலிப் படலைத் திறந்துகொண்டு உள்ளே வந்தது. லாந்தருடன் ஓடிவந்த நாகம் கிணற்றடி மேடையில் நின்று பார்த்தாள். அவளுக்கு இந்தக் குரல் புதியதல்ல. ''இங்கே... எப்படி அவன்... எதற்காக... இவருக்குப் பிடிக்காதே...'' இப்படி குழம்பினாள் நாகம்.

வந்தவன் சுந்தரமூர்த்தி. நாகத்தின் தூரத்து உறவினன் மாமா.

''நாகம்! உங்க சுந்தரமூர்த்தின்னா வந்திருக்கான்... இன்னொரு இலையைப் போடு... ஏண்டாப்பா... நேர வர வழியே தெரியாதா உனக்கு. இப்பத்தான் எலையப் போட்டா அவ. வாசவழியா வர்றதுதானேடா இப்படி கொல்லைப் புறமா வந்து நிக்கறயே...''

''இல்லேண்ணா சாயங்காலமே வந்துட்டேன். வீட்டப் பூட்டீட்டு எங்கியோ போயிருந்தேள். வெளியே அப்படியே போய் கிருஷ்ணையர் க்ளப்லே காப்பி சாப்ட்டூட்டு வந்தேன். வந்திருந்தேள்னான லைட்டு எரியுமோன்னோ. அப்படி எரியலைன்னா அப்படியே சினிமாக்கு போய்ட்டு வரலாம்னு ரோட்லேர்ந்தே பார்த்தேன். கொல்லைப்புறமா. சாப்ட உட்கார்ந்துட்டேளே எப்டி கூப்புடுறதுன்னு நெனைச்சபோதே யாருன்னு கேட்டுட்டு ஏந்து வந்துட்டேள்'' - என்றான் சுந்தரமூர்த்தி.

''வீடு பூட்டியிருந்ததா? ஓ! மாவரைக்க மேலண்டை வீட்டுக்குப் போயிருப்ப நீ வாடா-''

இருவரும் இலையில் அமர்ந்ததும் சாப்பாடு சத்தமேதுமில்லாமல் நடந்தது. நாகம் நிமிர்ந்தும் பார்க்கவில்லை. அவன் நிமிஷத்துக்கு ஒரு தடவை நாகத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தான். சர்மா அமைதியாய் சாப்பிட்டார்.

''மோர் விடு' - சுந்தரமூர்த்தி பாதை உண்டாக்கிப் பார்த்தான். இருளின் அமைதி ஏதோ செய்தது. சர்மா சாப்பிட்டு முடித்தார். செம்புத் தண்ணீரை எடுத்து கொடுத்தாள் நாகம். ஏறிட்டு அவளைப் பார்த்தான் சுந்தரமூர்த்தி. நாகம் பாதை விட்டு விலகினாள்.

நாகத்தின் கல்யாணத்துக்கு ஒளிந்து ஒளிந்து வந்து நின்று பந்தல்கால் ஒன்றைப் பிடித்துக்கொண்டு நின்று எரிய எரிய சர்மாவின் கிழவுரு கண்டு சாம்பியதும் கல்யாணத்தன்று மறுதினம் இரவு நாகத்திடம் ரகஸ்யமாய் இருட்டில் நின்று சிறு குழந்தைபோல் அழுததும் இன்னும் நெஞ்சிடிப்பாய் அதிர்கிறது. நாகம்...! இப்டியா முகம் மறைக்கிறாய்!

முன்னறைக்கு வந்ததும், காற்றுக்காக வாசலுக்குப் போனான். புழுக்கம்! காற்று வீசியது. தஞ்சாவூர் காற்று பகலின் உஷ்ணத்தை ஏற்ற வெக்கைக் காற்று... அவன் சாயங்காலமா தஞ்சை வந்து சேர்ந்தான். காலை ஆறு மணிக்கே வந்தவனாயிற்றே! இப்போது தானா வேலியோரமாய் நின்று கொண்டிருந்தான். காலையிலிருந்து வேலியோரமாக நிற்பதும் வாசலுக்கருகே வந்து பார்ப்பது மாகத்தானே இருந்தான். இந்தக் கிழம் இவளையும் வீட்டுக்குள் தள்ளி... உள்ளே திரும்பிப் பார்த்தான் சுந்தரமூர்த்தி. அது ஈசிசேரில் சாய்ந்திருந்தது. நாகம் வெற்றிலை மடித்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். கைகள் வெற்றிலைக் காம்புகளைக் கிழித்தன.

மெதுவாக உள்ளே வந்தான் சுந்தரமூர்த்தி. சர்மா நிமிர்ந்து பார்த்தார்.

''வெத்ல போடுறியாடா''

''இல்லண்ணா வாண்டாம்''

''சும்மா போடுரா! வாசனை சீவ கொழுந்து வெத்தல. நானே பொறுக்கி எடுத்து வாங்கிண்டு வந்தது. சிவபுரி புகையிலை...''

நாகம் வெற்றிலைப் பெட்டியை எடுத்து ஊஞ்சலில் அமர்ந்த சுந்தரமூர்த்தியிடம் வைத்தாள். வைத்து மீளும் அந்தக் கரங்களைப் பார்த்தான். செவ்வாழைத் தண்டு போல வளர்ந்த செழிப்பும் மஞ்சள் பூசி குளித்த

நிறமேறிய கைகளிலே முன் மயிர் நிரம்பிய எழிலும் ரத்தம் குப்பென்று பரவியிருந்த மல்லிகைப்பூ விரல்களுமாய்... இரண்டையும் எடுத்து நெஞ்சோடு நெஞ்சாய்...

ஒருகணம் தடுமாற்றம்... கண்களில் நீர் நிரம்பி விட்டது உணர்ச்சியில். நாகம் உள் அறை இருட்டில் ஏதோ தேடுவது இருளுக்குள் தெரிந்தது.

''உதவாக்கரைப் பயலுக்கு நாகத்தை கல்யாணம் பண்ணிவைக்யணுமாம்! அதுதானே இஞ்ச நடக்காதுன்னேன். பதினொன்னுக்கு மூத்ததாப் பொறந்திருக்கா அவ. அவளைக் கொண்டுதான் மத்ததுகள் கரையேறணும். இந்த அல்பப் பயலுக்கு கொடுப்பேனா... பெரிய வித்வனோல்யோ கண்டிப்பா பொண் அவச்யம்தான் ஹெஹ்ஹெஹ்ஹே!''

...ரேழியறையில் நின்றுகொண்டு நாகத்தின் தகப்பனார் சுப்பு நின்று பேசியதெல்லாம் தலைகுனிந்து வாங்கிக் கட்டிக் கொண்டது இன்னும் நினைவில் ஊசியாய் ஏறுகிறதே. நாகம்... நீயாவது... சே நாகம்!

அன்றிலிருந்து இன்றுவரை அழகையெல்லாம் தோற்கடிக்க அழகாக பிறந்ததிலிருந்து உன்னையாவது புரிந்து கொண்டிருக்கிறேனா? இல்லை புரியத்தான் விட்டாயா? சாட்டை போன்ற அதே பளபளக்கும் உடல். என்னெல்லாம் அடங்கியிருக்குமோ அப்படி நெஞ்சு. நிமிர்ந்து அவள் நடந்து வரும்போது ஆண் களையேறிய அற்புத வளமை. என் முன்னே நாகம் வந்தால் என் உள்ளம் குதூகலிக்கும், கும்மாளமிடும், அழும், கோபிக்கும் - நீயாக என்று பேசியிருக்கிறாய் நாகம்! வலிய வலியப் பேசினால் ஒரு வார்த்தை பொறி தட்டுவதுபோல் பேசுவாய்... அதுவும் உன் அழகே.

கைகளா அவைகள்! வைரத் தண்டுகள்! அவைகளை அணைத்துக்கொள்ள இதோ எதிரே வெற்றிலை குதப்பிய இந்தக் கிழம்.

கல்யாணத்துக்குச் சரியாய் ஒரு மாதம் ஒன்றரை மாதம் இருக்கலாம். ராஜப்பையன் சாவடியில் நாகத்தின் தகப்பனார் வீட்டுக்குப்பின் வாழைத்தோப்பில் நாகத்தைச் சந்தித்த போதுகூட.... என்னதான் பேசமுடிந்தது? அவள் ஆணாய்ப் பொலிந்தாள் நான் பெண்ணாய்த் தலை குனிந்து நின்றேன். ஏமாற்றத்திலும் வெட்கத்திலும் பயத்திலும் நெஞ்சம் அழுது அல்லாடியது. கால் புதைந்த சேற்றை உதறியபடி என்னைக் கடந்து அவள் போனபோது அவள் இடுப்பு வளைவில் கழுத்துச் சரிவில் உள்ளம் சிக்கியபோது திருடன் திருடுவதுபோல அவள் கரங்களைப் பேராசையில் பற்றியபோது.

நான் அழுதுவிட்டேன்... அழுதுவிட்டேன்... பற்றிய கைகளை அவள் உதறவில்லை பதறவுமில்லை. வாழை இலைச் செறிவும் வாழைக் கன்றுகளும் சாட்சி. நான் வெட்கத்தில் புதைந்து நின்றேன்.

''என்ன? ம்?''

''ஏன் கையைப் பிடிச்சே!?''

''...............''

''நான் போறேன் கைய விடறாயா?''

கை வழுக்குமுன் பற்றி எனதாக்கும் அவசரம்... ஆனால் அழுகை...! நான் நடுங்கியபடியே அவள் கைகளில் என் கைகளை வலுவாய் பின்னிக்கொண்டு நெருங்கிக் கொண்டேன் - மூச்சு முட்டியது. தொண்டை அடைத்தது ''ஏன் அழுறே?''

.....அவளுக்கா தெரியாமல் இருக்கும்... தெரியாதோ... ''சுந்தரமூர்த்தி! இதபார் ஏன் இப்படி அழுதுண்டு என் கையைப் பிடிச்சிண்டிருக்கே! கைய விடு!'' - தெளிவான குரல்.

''ஏன் இப்படி என்னைக் கொல்றயோ நாகம் உனக்குப் புரியிலியா?''

''ம்'' - ஒரு புள்ளிக்கு வந்ததும் அவள் நிறுத்திக் கொண்டாள். வாழைக் கொல்லையின் மறுபுறத்தில் யாரோ உரக்க பேசிக்கொண்டே போகும் ஓசைகள். இலைகள் தலை வீசி ஆடின காற்றில்.

தைரியத்தைப் பற்றி இழுத்து அவள் பற்றியிருந்த கைகளை எடுத்து என் உதடுகளில் பொருத்திக் கொண்ட போது வாழைக் கொல்லையுள் யாரோ வரும் ஓசை கேட்டது. என் கரங்களைப் பற்றியிருந்த அவள் விரல்கள் ஏதோ பேசின. அவள் கண்களில் நீர் நிரம்பிவிட்டது.

''நான் போய்ட்டு வர்றேன் சுந்தரமூர்த்தி வரட்டுமா?'' - அவள் கைகளை விடுவித்துக்கொண்டு வாழைமரங்களுக் கிடையில் நிதானமாக நடந்துபோய் மறைந்ததைப் பார்த்த நான்?... நான்...?

ஓ! அந்தக் கரங்களா இவைகள்? அந்த தெய்வத்தின் அந்த கரங்களா இவைகள்? -! 'ஏழைக் குறும்பு' வைத்யர் சுப்புவின் மகளின் கரங்கள்!!

'ஏழைக் குறும்பு' வைத்தியர் சுப்புவின் பார்வையில் உதவாக்கரை ஆனதுமட்டுமல்ல தன் உதவிகளை யெல்லாம் சுப்பு அதிகாரம் செய்து மிரட்டி வாங்குவதும் சுந்தரமூர்த்தி ஒரு வேலைக்காரன்போல் ஓடுவதும் கிராமத்தில் நன்கு தெளிவுபட்ட செய்தி. அவருக்கும் அவர் குடும்பத்துக்கும் அதுதான் ஸ்வாரஸ்யம்.

''எல சுந்தரமூர்த்தி கீரத்தண்டு வாங்கின்டு வா''

''சரி மாமா''

''அப்படியே மருந்து கடைக்கும் போய்ட்டு வர்றப்போ நம்ப ரத்னம் ஐயர் வீட்டுக்குப்போயி... அப்படியே கோலம் வீட்டுக்கும் போயி....''

''சரி மாமா.''

''என்னடா சரி மாமா வேண்டிக் கிடக்கு. ஆன கார்யம் ஒண்ணுமில்ல...'' போன கார்யத்த ஒழுங்கா முடிச்சிண்டு வரய்யா''

''..........'' மௌனமாய் உள்ளே பார்த்தான் சுந்தரமூர்த்தி.

அவர் போய்விட்டார் உள்ளே. வீட்டின் முற்றத்தில் நாகத்தின் முகம் தெரிந்தது. பளீரென்றிருந்த அந்த முகம் அவனைப் பார்க்கவில்லை. சுந்தரமூர்த்தி நெடும் பார்வை மீளவில்லை.

''என்னடாது இன்னும் இஞ்சயே நின்னுண்டிருக்கே போச்சொல்லி அரைமணி ஆறது...'' - அவர் போய்க் கொண்டே சொன்னார்.

காய்கனிகளுடன் உச்சி வெயிலில் சுந்தரமூர்த்தி பைகளைச் சுமக்க முடியாமல் நடந்து வியர்வை வழிந்து குளித்திருக்கும் உடம்புடன் வீட்டுக்குள் நுழைந்தபோது, குழந்தைகள் கூச்சல் போட்டுக்கொண்டு ஓடிவந்து அவனைக் கட்டிப் பிடித்தபடி ''சுந்து மாமா! சுந்து மாமா! எனக்கு எனக்கு'' என்றபடி அவன் கையிலிருந்த பைகளை ஆளுக்கு ஒன்றாக தூக்கிக்கொண்டு உள்ளே தூக்க முடியாமல் தரையில் இழுத்துக்கொண்டு ஓடியதும் அவன் வழிந்து கொண்டிருந்த வியர்வையைத் தோளிலிருந்த துண்டால் புரட்டித் துடைத்தபோது, சட்டை போடாத உடம்புடன் பாவாடை மட்டும் இழுத்துக் கட்டிக்கொண்டே உள்ளிருந்து மஞ்சு ஓடிவந்தாள். சிறுமி விளையாட்டு அவசரம் ''மஞ்சு! நாகம் அக்கா எங்கேடி?'' சுற்றிலும் பார்த்துக்கொண்டான்!

''அதோ'' - அவள் ஓடிவிட்டாள்.

திண்ணையின் கோடியிலிருந்த குதிர் அருகே அமர்ந்து அடியில் இருந்த பூட்டு கொட்டாங்குச்சியைப் பேர்த்து எடுத்துக் கொண்டிருந்தாள். குபுக்கென்ற சப்தத்துடன் அது திறந்து கொண்டதும் நெல் உள்ளேயிருந்து பொங்கி வழிந்து குவியலாகி நின்றது.

அவளருகே சென்று நின்றான். அப்போதும் அவள் திரும்பவில்லை. குவியல் தட்டிய நெல்லை அள்ளி அள்ளிக் கூடையில் போட்டுக்கொண்டிருந்தாள். தண்ணீர் வழிவது போல் குதிர் வாய்வழி நெல் வழிந்து பெருகியது. கண்ணாடிக் கரம் இரண்டும் அள்ளி அள்ளி... ... ...

''நாகம்!'' - சிரமப்பட்டு அந்தச் சொல்லைச் சொன்னான். அது அவள் காதில் விழுந்ததோ என்னமோ கூடையை இடுப்பில் இடுக்கியவாறே எழுந்து நின்றாள் நாகம். சாதாரணமாகத்தான் நின்றாள். அவன் அதிர்வு அடங்கவில்லை.

''உனக்கும் 'அவனு'க்கும் கல்யாணம் பேசி ஆயிடுத்தாமே நாகம்'' - துணிந்து இதைக் கேட்டதும் அவன் குரல் தழுதழுப்பில் ஒருகணம் நிலைத்த அவள்

''சீ! ஏன் இப்படி பயந்து சாகறயோ... தெரியல்ல... யாரு என்ன செஞ்சுடுவா? என் கையைப் புடிச்சி இழுத்துண்டா ஓடிப்பிடப் போற? ஏன் இப்படி மூஞ்சி பேயறஞ்சாப்ல... இத்தனை துடைநடுங்கிண்டு... ... ...என்னை யார் கல்யாணம் பண்ணிண்டா உனக்கென்ன? உன்னால் முடியாததை யாரு எவன் செஞ்சிண்டா என்ன... ... ... ...''

பளீர் பளீரென்று மின்னலும் இடியுமாய் அவன்மேல் சரிந்ததும் வாசல் திண்ணையில் வந்து தூணில் சாய்ந்து உட்கார்ந்தவன் விறுவிறுவென்று கூடையுடன் உள்ளே போய்விட்ட நாகத்தை மீண்டும் காண ... ... ... அவளும் வெறுங் கூடையுடன் திரும்ப வந்தாள்.

அவளுடனே மெல்ல நடந்தான். அவள் ஏதும் பேசி விடவில்லை.

''நாகம் இத பாரேன்''

''எதையும் பாக்கவாண்டாம் நீ போயிடு'' - பின்னாலேயே நடந்தான்.

''நான் சொல்றத்த கேட்டுண்டு ... ... ...''

''வாண்டாம் நீ போயிடு இப்ப''

''கேளேன்!''

''போயிடுன்னா போயிடு! ஆமா!''

''அவ்வளவுதானா''

''ம்! அதுக்கு மேலியும் இல்ல.''

ஒருகணம் முகத்தில் காறித் துப்பப்பட்டது போலிருந்தது. அடுத்தகணம் பரிதாபமாய் நின்றான் சுந்தரமூர்த்தி. நெல் அள்ளும் கரங்கள் அவனைப் பார்த்து சிரித்தன. மல்லிகை மொக்குப் போல மாப்பிசைந்து உருட்டியது போன்ற கரங்கள். இன்னும் ஊஞ்சலில்தான் உட்கார்ந்திருக்கிறானா சுந்தரமூர்த்தி?...

''மாமா'' - ஒருமுறை தடுமாறி ... ... ... ''அண்ணா'' என்றான். எதிரே இருந்த சர்மாவையும் நாகத்தையும் காணவில்லை. ஒரு ஜமக்காளம் விரித்துத் தலையணை போடப் பட்டிருந்தது... ஓ... அவர்கள் இருவரும் மாடிக்குப் போய் விட்டார்களா? ... ஆமாம் ''படுத்துக்கோடா நேரமாயிடுத்து'' என்று சொன்னதும் போனதும் பாலாவி போல மங்கலாக ஞாபகம் வந்தது.

நாகம்! - எப்படித்தான் ... எப்படித்தான்

ஒரே புழுக்கம்... ஹாலில் தொங்கிய வால்க்ளாக்கில் மணி பார்த்தபோது ஆச்சரியமாக இருந்தது. மணி பதினொன்றரை... சட்டையைக் கழற்றி சுவற்றில் கொக்கியில் மாட்டிவிட்டு... வேட்டியை அவிழ்த்து தழையக்கட்டி.... ... பூணூலை இழுத்துவிட்டு... முதுகில் வியர்வை ஈரம் அரிப்பு. பூணூலை மாற்றி மாற்றி இழுத்துவிட்டு... அப்பா... புழுக்கம் மாடிவராந்தாவுக்குப் போய் காற்றாட... சரி மேலேபோய்.. மின்சாரம்போல் ஏதோ தாக்கியது... நாகம் மாடிப்படியிலிருந்து கீழிறங்கி வந்து கொண்டிருந்தாள்... கையில் சில்வர் செம்பு... அதே பழைய நிதானமும் எடுப்பும். கறுப்புசேலைதான் எப்படி அவளுக்கு பொலிகிறது ...என்ன அழகான வடிவு... தண்ணீர் எடுத்துக்கொண்டு மீண்டும் கதவடைத்து மாடிப்படி நோக்கி வரும்போதும் பதற்றமில்லாத அசைவுகள். ஒருகணம் அவள் நிமிர்ந்து அவனைப் பார்த்து திமிர்ந்துபோய் நின்றாள். இது அதிர்ச்சியல்ல. பயம் அல்ல. தவறிவிடுவோமோ என்ற பயம் அல்ல. நின்று அவனைப் பார்த்தாள்.

சுந்தரமூர்த்தி மறுபடியும் பெண்ணாகித் தலைகுனிந்து கொண்டான்.

....தலையைக் குனிந்து கொள்ளுகிறாரே! ம்ஹூம்! என்றைக்கு இவன் தலைநிமிர்ந்தான். என்ன உடம்பு அது? சந்தனமா இல்லை செந்தூரமும் சந்தனமும் கலந்து உருட்டிய மேனியா? பனியன் கூட இல்லாத இந்த

மேனியில் ஏதாவது ஒருபுள்ளி மாசு இருக்கிறதா... சுருள்சுருளாய் அலைந்த இந்த தலைமுடி யாருடையது?... என்னுடையது! பாலூற்றியது போல் அகன்று விரிந்த அந்த நெற்றியும் விசிறிக்கிடக்கும் புருவங்களும் கடல்விழிகளும் கபடமில்லாத குணத்தைக் காட்டும் நேரான அந்தச் செதுக்கிய மூக்கும் உதடுகளும் சங்கைக் கடைந்த வளையக் கழுத்தும் யாருடையவை? என்னுடையவை...! என்னுடையவை! என்னுடையவை!

பயமும் அச்சச் சகடமும் ஏமாற்றமும் வாழ்வையே மறந்த கவலையற்ற எழிலும் வெறுங்கையனாக நிற்கும் இந்த சுந்தரமூர்த்தி...

ஓ! என்னுடையவன்... ஆமாம். வெள்ளிக் கெண்டியில் பால்குடித்த அந்த நாளே அவள் நிர்ணயித்ததுதான். அவனை கொஞ்சகொஞ்சமாக தனக்குள் உருவேற்றிவிட்ட பிறகு....

யோசனைகளுக்கு இடம் பொருள் உண்டா தோன்ற...?

பதின்மூன்று வயதில் ... ... மன்னார்குடிக்குப் போய் ஹைஸ்கூலில் படித்து ரெட்டைமாட்டு வண்டியில் பாமணியாற்றுக் கரையோரம் வரும்போது வண்டியைப் பிடித்துக் கொண்டே வண்டியோடு ஓடிவருவானே அவன்.

அப்போது நான்தான் பெரியவள்! இப்போதும் என் வாலைப் பிடித்துக்கொண்டு வருகிறானே... எனக்குள்ளேயே இந்த எண்ணமா?

அப்போதும் இப்படித்தான்!! மழைகொட்டும் ஒரு இருளேறிய மாலையில் அவனும் வண்டிக்குள் ஏறிவிட்டான். அவளுடன் சேர்ந்து நடுங்கினான் குளிர்! சேற்றை அரைத்துக் கொண்டு வண்டி முன்னேறிக் கொண்டிருந்தது. அவளை இறுகப் பிடித்துக்கொண்டிருந்த கதகதப்பும் படுதாவை நீக்கிக்கொண்டு அடித்த சாரலும்... ...

சுந்தரமூர்த்தியா அந்நியன்! அப்படி நினைக்கவே முடியவில்லையே.

மேலிருந்து சர்மாவின் குரல் கேட்டது.

"நாகம்! நாகம்!"...

சீ! என்னவெல்லாம் நினைக்கிறேன்!

சுந்தரமூர்த்தி இன்னும் குனிந்துதான் இருந்தான். நாகம் படியேறி மறைந்தாள்... ... மாடிக்கு.

எவ்வளவு நேரம் அப்படியே நின்றானோ தெரியாது.

மெதுவாக நடந்து படியருகே வந்தான்.

ஒரு ஒரு படியாக மெல்ல மெல்ல ஏறினான். ஆமாம் மாடியில் ஏறிவிட்டான். அத்தனை படிகளையும் கடந்து மேலே வந்தபோது அந்த நீண்ட முற்றத்தில் நடந்து வந்துபோது... நாகத்தின் சிரிப்பொலிகளும் சர்மாவின் பேச்சுக்குரல்களும் கேட்டன... நல்ல இருட்டு... கொஞ்சம் கொஞ்சமாக நடந்து அந்த அறை ஜன்னலோரமாகச் சென்றான் சுந்தரமூர்த்தி. உள்ளேயும் விளக்கில்லை. இருள்... இருள்பூசிய பொருள்கள் எதுவுமே தெரியவில்லை. சர்மாவின் கொஞ்சல்களும் நாகத்தின் பிணங்கல்களும் மெல்லிய இழையாக ஒலித்தன.

கண்களைத் துருவிக்கொண்டு பார்த்தபோது... ஒன்றும் தெரியவில்லை. மல்லிகைப்பூ வாடையும் மருக்கொழுந்து வாடையுமாய் வீசியடித்தது. உடல் அனலாய்க் கொதித்தது. மனம் பேயாய் ஆடியது. ஆசையும் தோல்வியும் இழப்புமாக சுழன்ற வலி நெஞ்சில் இடியாய் அதிர்ந்தன.

அவள் குரல் கேட்டது... அவர் குரலும் முணகியது. பெருமூச்சுகள்!

மெதுவாய் அசைந்து ஒவ்வொரு படிக்கட்டாக நின்று நின்று கீழிறங்கி வந்தான் சுந்தரமூர்த்தி. விளக்கை அணைத்துவிட்டான். இருள்தான் நல்லது... படுக்கையில் விழுந்தான்... விம்மல்களும் எரிச்சலும் தொண்டையை முட்டின. கண்களிலிருந்து கண்ணீர் கழன்று காதோரமாக வடிந்து தலையணையில் இறங்கியது.

மணி மூன்றடித்தது. எங்கோ ஒரு சேவல் கூவியது. சில்லிட்ட காற்று வீசியபோது உடம்பு நடுங்கியது. தான் இன்னும் தூங்கவில்லை என்பது அப்போது அவனுக்கும் புரிந்தது. மீண்டும் ஒரு முறை சேவல் கூவல் கேட்டது.

''அப்ப கடைக்கு போயிட்டு வரேன் நாகம் ... ஏண்டா? தஞ்சாவூருக்கு ஏன் வந்தேங்கறத்த சொல்லவேல்லியேடா...? அப்பா எப்படியிருக்கார்... வயசான காலம்... திடமா இருக்காரோல்யோ... நான் போய் கடையத் திறக்கணும்... என்ன? நீ இரு... மத்யானம் பேசிக்கலாம்... என்ன...'' - பேசிக்கொண்டே வாசல்வரை வந்தவர் நாகத்தின் கையிலிருந்து கடைசி வெற்றிலையும் வாங்கி வாயில் திணித்துக் கொண்டே படியிறங்கினார்.

''வர்றேண்டா சுந்தரமூர்த்தி'' - விறுவிறுவென்று ஆஜானுபாகுவான அந்த உருவம் நடந்தது... மறைந்தது. கம்பிக்கேட்டைப் பிடித்தபடி நின்று; போய்க்கொண்டிருந்த சர்மாவைப் பார்த்துக் கொண்டிருந்த நாகம் சுந்தரமூர்த்தியைத் திரும்பியும் பார்க்காமல் நிதானமாய் நடந்து வந்து வீட்டுக்குள் போனாள்.

சுந்தரமூர்த்தி உள்ளே வந்தான். கொல்லைப்புறக் கொடியில் சேலையைக் காயப் போட்டுவிட்டு உள்ளே வந்து கொண்டிருந்த நாகத்தைப் பார்த்தான். கும்மட்டி அடுப்பில் கரியை அள்ளிப்போட்டு விசிறுவதை நாகத்தை நிலைப்படியில் நின்று பார்த்தான். அறையின் மற்றொரு மூலையில் சொர்ரென்ற சப்தத்துடன் காஸ் ஸடவ் எரிந்துகொண்டிருப்பதும் மௌனமாய்ப் பார்த்துக்கொண்டிருந்த நாகத்தையும் பார்த்துப் புகைந்தான் சுந்தரமூர்த்தி.

நேரம் நகர்ந்தது. மௌனம் நீண்டது.

மெதுவாக அவன் பக்கம் திரும்பினாள். கண்களில் பழைய விறைப்பு சிலிர்த்தது.

''எதுக்கு இஞ்ச வந்தே?''

''......உன்னை ...உன்னைப் பார்க்க..த்தான்''

சுந்தரமூர்த்தி அடிவாங்கியவன்போல நின்றான். அங்கேயே நின்றான்.

''அதான் எதுக்குன்னேன்... புரியல்லியா?''

"...."

"போறது! எப்படி இருக்கா... செத்துட்டாளோன்னு பார்க்கலாம்னு வந்தயா? இல்லே... சினிமா... மாதிரி..."

"உனக்கு ஆசை வேற! அது நானாக்கும்! இன்னி வரைக்கும் அது இருக்காக்கும்! இன்னும் உனக்கு வேணுமாக்கும்! அதுக்குத்தானே வந்திருக்கே நீ! புரியறது எத நம்பிண்டு இஞ்ச வந்தே?

"......."

"இன்னும் நன்னாத்தான் அழறே! கையிலிருக்கச்சே என்ன பண்ணினே சுந்தரமூர்த்தி" - எரிந்து எரிந்து ஆடினாள் நாகம்!

அடியுண்டு தாங்காமல் புரள்பவனைப்போல் உதடுகள் நடுங்க அங்குமிங்குமாக அசைந்து நின்றவள் சொருகிய சொருகல்களில் வழிந்த உதிரம் கண்டு நின்று கண்ணீர் சோர சோர்ந்தான். சுவற்றில் அங்கேயே உட்கார்ந்து விட்டான் அவன். விக்கியது தலை கோணிக் கொண்டது 'ஐயோ' என்றபடி அரற்றி அருகே தண்ணீர் தெளித்து முகத்தைத் துடைத்து வாய் வழியே வெந்நீரைக்கொடுத்தும் அவன் கண்விழிக்கவில்லை. மூச்சு கூட சன்னமாக இழைந்தது வலிப்பு. அவன் இப்படியா மாறி இருக்கிறான்? ஈஸ்வரா!

"ஐயோ நான் என்ன பண்ணுவேன்" அலறினாள்.

ஓவென்று அலறிக்கொண்டு அவனைத் தழுவிக்கொண்டு அழுதாள் நாகம்.

"கொன்னுட்டேன்! கொன்னுட்டேன்" - என்று அழுதபோது ஒருகணத்தில் அவன் லேசாகக் கண்திறந்து அவள் மடியில் புதைந்து கொண்டான். எழுந்து அவளைத் தழுவிக் கொண்டான். சொர்ரென்ற ஸ்டவ் ஒலி தவிர வேறு ஓசையே இல்லை. அவனை அணைத்து படுக்கையில் விட்டதும் பெரு மூச்சு ஒன்று வெளி வந்தது. அவள் சேலைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். மூச்சுகள் முட்டி மோதிக் கலந்தன.

"ஏன் வந்தேன்னு கேப்பயோ நாகம்?" - தழுதழுப்பு அதிர்ந்தது.

'ஓ'வென்று கதறி அழுதுகொண்டே உள்ளே ஓடினாள் நாகலெக்ஷ்மி.

"நான் சீக்கிரம் போகணும்" - என்றான் சுந்தரமூர்த்தி. "இப்போ அண்ணா வந்தா?"

"வந்தா என்ன சுந்தரமூர்த்தி?" - புருவங்களை வளைத்தாள் அவள்.

குறுகலான அந்த மாடி அறையில் பெரிய கட்டிலில் இருவரும் கிடந்தனர். பட்டுத் தலையணையை எடுத்து கட்டிலின் கம்பியில் சாய்த்துவைத்து அதில் சாய்ந்திருந்தான் சுந்தரமூர்த்தி.

"நீதான் என்னோட புருஷன் ஆமா! தப்பா பேசறேன்னு நெனைச்சிண்டிருக்காதே. தப்பா செய்துப்ட்டு நல்லதா நம்மப் பத்தியே நினைச்சுனுட்ரோம், எங்கம்மா பதிமூனு குழந்த பெத்து வீசிப்ட்டு கண்ண மூடிட்டா..."

''எங்கப்பா... கோலம் கோலம்ன்னு இருந்தாளே நம்ப ஊர்லே சதுர் ஆடறவ... அவகிட்டேயே கையேந்தி பிச்சை நின்னார்.

வீட்டில நான் பெரியவ! அடங்கி அடிவாங்கி சுமந்து நின்னேன்.''

சுந்தரமூர்த்தி அவளையே பார்த்தான். அலட்சியமாய் பேசிக்கொண்டே போனாள்.

''என்ன பாக்கறே... ஆமா! ராத்திரி மூணு மணி நாலு மணின்னு அலஞ்சுப்ட்டு அப்பா வருவர்! வாசக் கதவடியிலேயே அடி எனக்கு... கோவில் அர்ச்சகர் மகனை எனக்குப் பார்த்தா... அவன் இந்த ஒதிய மரம் வேண்டாம்ன்னு போய்ட்டான். அப்படி எத்தனை எல்லாத்தையும் வித்து கோலத்து மேலியே சொரிஞ்சார். என்னன்னு கேக்கல்லாமோ கேட்டுப்டேன் நான்... அன்னிக்கி அவர் அடிச்ச அடியும் மிதிச்ச மிதியும் நான் பெண்ணாயிருக்கற வரை மறக்கவே முடியாது.

நீ வளைய என்னைச் சுத்தண்டிருந்தே. உன்னைப் பார்க்கறப் போதெல்லாம் என் உசிரையே ஓங்கிட்ட பாக்கறாப்பில இருக்கும்.

இன்னிக்கு ஒங்கிட்ட குடுத்த இந்த உடம்பை மூணு மாசத்துக்கு முன்னேயே என்னை கல்யாணம் பண்ணிண்டவர்ட்டையும் கொடுத்தேன்.

அவரும் ஆண் பிள்ளைதானே. என்னை தனக்குன்னு நெனச்சிண்டார். நெனச்சிண்டாப் பரவாயில்லை. நான் அப்படி நெனைக்கல்லியே.

அவர் என்னை குத்துவிளக்கு மாதிரி துடைச்சு துடைச்சு எரிச்சார். சுந்தரமூர்த்தி உன்னை நெனச்சிண்டே நான் எரிஞ்சேன்.

விரிந்த கண்களுடன் தலை குனிந்து கொண்டான் சுந்தரமூர்த்தி.

''அவர்தான் என்ன சுந்தரமூர்த்தி! அல்ப சொல்பமா என்ன? வைரக்கம்பு மாதிரி பொலியறவர்! மனஸ் முழுக்க பூப்பூவா முளைச்ச கொத்து! என்னைக் கட்டி அணைச்சுக்கறப்போ மூச்சு முட்றப்போ அவர் விரல் எல்லாம் பேசும். மேலெல்லாம் சந்தனம் வாசிச்சிண்டு உள்ளெல்லாம் பூவாப் பூக்கறவர் அவர்.

அவள் பேசும் விழிகளை நிமிர்ந்து பார்த்தான் சுந்தரமூர்த்தி.

''உடம்பு எப்படி? ராமர் பொம்மையாட்டம் அப்படியே வழவழன்னு கருங்கல்லாலே அடிச்சு பஞ்சு மாதிரி அமுங்குமா வேறு ஏதாவது? ஆமா! வெளிச்சமா ஒளிக்காம பளீர்ன்னு பொழியறவர். ''ஏய் ஆசையா இருக்குடி''ன்னு சொல்லிண்டேதான் ஓடிவந்து பிடிப்பார் என்னை. சின்னதா ஆட்டுக்குட்டி நிண்டுமே அது மாதிரி நான் அவரோட அவரா ஆகும் போது உன்னை நெனைக்காம இருக்க முடிஞ்சதில்ல.

மூணுமாசம் ஆறது கல்யாணமாகி. வயசு அவருக்கு அறுபது! அறுபதில் நீயும் நானும் இப்படி இருப்போம்னு நினைக்கறயா? ம் ஏது! காலும் கையும் உடம்பும் எப்படி கிழங்கு மாதிரி... ம்ஹும்... பணம் குடுத்து நெலம் வாங்கி எங்கப்பாவுக்கு குடுத்து என் தங்கச்சி மூணுபேருக்கு கல்யாணம் பண்ணி... தம்பிகளை படிக்க அனுப்பி... ஈச்சுரன் நிறைய அவருக்கு குடுத்திருக்கார். அவரும் எப்படி அள்ளிஅள்ளி... எல்லாரும் சாப்டுங்கடான்னு வீசி இன்னமும்

கலகலன்னு எப்படி இருக்கார் பார்த்தயா சுந்தரமூர்த்தி? இன்னமும் கைவிரிச்சா மூடத்தெரியாது...''

''நான் தீர்மானிச்சுண்ட வாழ்க்கையிலே நாகமான்னா நான் பிறந்தேன். நான் பிறந்தப்போ என்னைத் தாலாட்டி பிரம்புத் தொட்டில்ல வளத்தி வெச்சிருந்தப்போ என்னைச் சுத்திண்டு படம் எடுத்து என்மேல் நாகம் இறங்கி ஆடித்தாம். 'தேமே'ன்னு கத்திண்டே அம்மா வயத்லடிச்சுட்டு ஓடிவந்தப்போ வேண்டிண்டாளாம் நாகலக்ஷ்மின்னு பேர் வெக்யறதுன்னு... நான் தப்பிச்சேன் ஆனா நானே நாகமாயிட்டேன்.

உன்னண்டே பழக ஆரம்பிச்சப்போ உன்னைச் சுத்திண்டேன். இன்னும் அவரையும் சுத்திண்டேன். இன்னும் வழுக்கிப் பிரியற காலம் வரலையோ என்னமோ.

கூதல் ராத்திரில அம்மா கடவாயில் கஞ்சி எறங்கிண்டிருந்தப்போ எங்கிருந்தோ அப்பா வந்தார். அம்மா கெதியாக் கிடந்தா முழிச்சுப் பாத்துப்ட்டு அப்பா கிளம்பினார். கோலம் வீட்டுக்கு இன்னக்கு மட்டும் போகாதேங்கோ நான் போயிடுவேன். போகாதேங்கோன்னு கதறினா அம்மா.

''குளிர்றதுடின்னு சொல்லிப்ட்டு சாரல்ல படி எறங்கிப் போய்டா அப்பா. அன்னி ராத்திரி நான்தான் அம்மாவைத் தீண்டியிருக்கணும். விசித்திரமா அன்னி ராத்திரி உன்னைக் கொல்ற மாதிரி கனவு வேற கண்டேன், அம்மா கண்ணை மூடினா அன்னி ராத்திரி!

காலேல அப்பா வந்தார். பொணத்தைத் தூக்கி எறிஞ்சுட்டு கோலத்தைத் தேடிண்டு போய்ட்டா. அன்னி மூணா நாள் அர்த்தநாரின்னு ஒரு கோட்டான் இருந்துதே மூணாம் வீட்டில் அது வந்து... நீ... நான் கல்யாணம்ன்னு தத்துப் பித்துன்னு விழுந்து வெச்சு என் கையைப் பிடிச்சுது. அப்பா அவன் கிட்ட அடி செம்மையா வாங்கி திரும்பியும் கோலம் வீட்டுக்குப் போனார். அவள் அவரை உரிஞ்சிப்ட்டா, ஆமா.

பனிரெண்டு பேருக்கு சமைச்சுப் போட்டு அள்ளிப் போட்டு நல்லது எதுவுமே தெரியாம போய் போயி பசி மட்டும் தெரிந்து கிடந்தப்போ... நீ மட்டும் தெரிஞ்சிண்டே இருந்தே.

அன்னிக்கு நீ கெஞ்சி நின்னப்போ பசியும் பன்னண்டு வயிறும் எனக்குத் தெரிஞ்ச மாதிரி நீ தெரியல்லை. இப்போ அவருக்கு மேலே நீதான் தெரியறே! சுந்தரமூர்த்தி... வயத்தால் நகந்து நகந்து மண்ணைத் தின்னு தின்னு உடம்பைப் பளபளன்னு ஆக்கிகிட்ட பாம்பா நான் நெளிஞ்சு நெளிஞ்சு வளந்துட்டேன் சுந்தரமூர்த்தி! உள்ளியும் வெஷம்! நாக்லயும் வெஷம்ன்னு இருக்கேன். உன்னைத் தீண்டிடப்படாதுன்னு நான் ஆயுசெல்லாம் பட்டுண்டிருந்த பாடெல்லாம் வீணாயிடுத்து.

உன்னைத் தீண்டிட்டேன் சுந்தரமூர்த்தி தீண்டிட்டேன். நேத்திக்கி ராத்திரி அவரைத் தீண்டின வேகத்தோட அடங்கி இருக்க முடிஞ்சுதா? - 'ஓ' வென்று கதறிக் கதறி அழுதாள் நாகம்!

சுந்தரமூர்த்தி ஏதோ பேயறைந்தது போல பேதலித்துக் கிடந்தான். கற்சிலை போல் அவள் முன் கிடந்தான்.

''இந்த உடம்புக்கு இத்தனை நெளிசலும் வளைசலும் குடுத்தானோல்யோ ஏன் அது மாதிரி? இப்படி நாகமா நெளியறத்துக்கா? உன் உடம்பெல்லாம் சுருண்டு நெளியணும்ன்னு தவிச்ச ஆசை தீண்டுனத்துல வந்து நின்னிருக்கேன்...'' விக்கி விக்கி அழுதாள்.

அமானுஷ்ய ஒளி வீசும் அவளுடைய கண்கள் நெளிந்து வளைந்த அந்த உடம்பும் அழகும் பிடிப்பும் எல்லாமே அப்படியே காந்துவது போலிருந்தது, எரிந்தது.

கீழே கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. துடித்து எழுந்தான் சுந்தரமூர்த்தி. அப்படியே கிடந்தாள் நாகம். கைகளிரண்டையும் அவன் மேல் போட்டு பற்றி இழுத்து தீண்டினாள் நாகம்.

வேகமாக கீழிறங்கி ஓடினான் சுந்தரமூர்த்தி.

சர்மாதான்! மல்லிகைப் பூவுடன் வீட்டுக்குள் நுழைந்தார். வீடு முழுவதும் மல்லிகை மணம். ''நாகம்! நாகம்!'' அழைத்தார். அலங்கோலமாக நாகம் மாடியிலிருந்து இறங்கி வந்தாள்.

காப்பி கொண்டு வந்து கொடுத்தாள். குளித்தாள். சீவினாள். மினுக்கினாள். சர்மா அவளை அழைத்துக்கொண்டு கோவிலுக்குப் போய் வந்தார். அன்றிரவும் அதுபோலவே... சுந்தரமூர்த்தி கீழேயிருந்து இரவு உச்சியில் மாடிப்படியேறி மேல்தளம் வந்தபோது நாகத்தின் சிரிப்பொலி கலீர் கலீர் என்று அந்த அறையிலிருந்து வெளி வந்து கொண்டிருந்தது. சிறுகுழந்தைபோல் சர்மாவை மடியில் போட்டுக் கொஞ்சுவதும் அவர் பிணங்குவதும் இறுகும் மூச்சொலிகளும் இன்பமாய் அலையடித்துக் கொண்டிருந்தன.

தலையை இருகைகளாலும் பற்றிக்கொண்டு இரவு மூன்று மணி வரை ராக்காவலாய் நின்றான் சுந்தரமூர்த்தி.

சாக்குருவி ஓலமிடவில்லை.

ஆந்தைகளும் அலறவில்லை.

விடிந்தபொழுது உதயவானில் சகதி போலிருந்த மேகக் குழம்புகளுக்கிடையில் சூரியன் தத்தளித்துக்கொண்டிருந்த கடும் வேளை. படுக்கையில் புரண்டது போதுமென்று சுந்தரமூர்த்தி எழுந்து வாசலுக்கு வந்தான். வாசலில் -? வாசலில்?

பிரும்மாண்டமாக நாகபந்தம் கோலமாக வாசலில் பூவேலைகளுடன் சாணம் தெளித்த தரையில் புணையலாகப் பின்னிப் பின்னிக் கோலமாக இழைத்திருந்தது.

இவ்வளவு விடியலிலே இவ்வளவு பெரிய கோலமா?

கொல்லைப்புறம் மெதுவாக நடந்துவந்தபோது கொல்லை அரசமரத்தடியில் பனிசோர்ந்த புல்தரையில் நாகம் கிடந்தாள். அலறியடித்துக் கொண்டு ஓடி வந்த சுந்தரமூர்த்தி நின்று பார்த்தான்.

வாயில் நுரை பொங்கி வடியக் கிடந்தாள் நாகலக்ஷ்மி. மரத்தடியில் இருந்து நாகப்புற்று உடைத்துத் தள்ளப்பட்டிருந்தது. நாகப்பாம்பு ஒன்று மண்ணோடு மண்ணாய் நசுங்கிக் கிடந்தது.

நாகம் செத்துக் கிடந்தாள். என்னைத் தீண்டிய நாகம் செத்துவிட்டாள். தீண்டியதும் செத்துவிட்டாள். சர்மா ஓடி வந்தார். அலறினார். நான் சிரித்தேன். என்னைத் தீண்டியதும் செத்துவிட்டாள். நாகம் செத்துக் கிடந்தாள். ஆமாம் செத்துக் கிடந்தாள் நாகம்.

(அங்கிள் - 1971)

